Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 30—No. 11

# சித்தாந்தம்

சைவசித்தாந்த மகாசமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'



மலர் 30 | ஹேவிளம்பி கார்த்திகை 1957 நவம்பர் | இதழ் 11

உள்ளுறை



பத்திராசிரியர் : C. M. இராமச்சந்திரன் செட்டியார், பி.ஏ., பி.எல்.

உதவிப் பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஓ.எல்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா 4

## சமாஜ அறிக்கைகள்

**சமாஜப் பொதுக்கூட்டம் :** நம் சமாஜத்தின் 52-வது ஆண்டு நிறைவு விழா நடத்துவதைப் பற்றிய காலம் இடம் தலைவர் நடைமுறை முதலிய விவரங்களை முடிவு செய்யச் சமாஜத்தின்பொதுக்கூட்டமொன்றுசென்னை, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, 150-வது எண்ணுள்ள இல்லத்தில், 1957 நவம்பர் மாதம் 16-ந் தேதி சனிக்கிழமை காலை 9-மணிக்குக் கூடும். அதுபோது கூட்டத்துக்கு வேண்டிய அங்கத்தவர் நிறைவெண் (Quorum) இல்லாவிடில் ஷை விஷயங்களைத் தீர்மானிப்பதற்கே ஷை இடத்திலேயே மறுநாள் 17-11-57 ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு, சமாஜ விதிகளின்படி வருவோரைக் கொண்டு அக்கூட்டம் நடைபெறும்.

**சமாஜச் செயற்குழுக் கூட்டம் :** 1957 நவம்பர் மாதம் 17-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு, சென்னை, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, 150-வது எண்ணுள்ள இல்லத்தில் கூடும்.

**நற்செய்தி :** உயர்திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் உடல்நலம் பெற்று சுகமடைந்துள்ளார்கள்.

---

## எழுபதாம் ஆண்டுத் தொடக்கம்

நமது சமாஜத்தின் செயற்குழு உறுப்பினர்களுள் ஒருவரும், சித்தாந்தம் பத்திரிகையின் ஆசிரியரும் ஆகிய **கோவை கிழார்-இராவ் பகதூர்-திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார்** பி.ஏ., பி.எல். அவர்களின் **69-ஆம்** ஆண்டு நிறைவும் **70-ஆம்** ஆண்டுத் தொடக்கமும் **19-11-57** அன்று நிகழ இருக்கிறது. தமிழும் சைவமும் தழைத்தினி தோங்க ஒல்லும் வகையெல்லாம் பல்லாற்றானும் உழைத்துவரும் அவர்களின் அருமை பெருமைகளைத் தமிழுலகமும் சைவவுலகமும் நன்கறியும். எல்லாம் வல்ல சிவபிரான் திருவருளால் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் நலமுற வாழ்ந்து செந்தமிழ்க்கும் சிவநெறிக்கும் சிறந்த பல தொண்டுகளைச் செய்து வருதல் வேண்டும் என, அவர்களை நம்மனோர் அனைவரும் வாழ்த்தி வணங்கி மகிழ்வோமாக.

செந்தமிழ்க்கும் நல்ல சிவநெறிக்கும் பல்லாற்றான்
அயர்விலாத் தொண்டுகள்தாம் ஆற்றுகிற்கும்—நந்தமரும்
கோவைகிழார் ! அன்பின் குரிசில் ! உலகமெலாம்
மேவிமிக வாழ்க இனிது !

—முருகவேள்.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு.

| மலர் 30 | ஹேவிளம்பி கார்த்திகை 1957 நவம்பர் | இதழ் 11 |
|---|---|---|

## ஆலய அற்புதங்கள்

ஆசிரியர்

**ஆலயம் சிறப்புவகை :** "ஆலயந்தானும் அரனெனத் தொழுமே" என்பது சிவஞான போதம். இவ்வடியில் காணும் கருத்து எத்தனை பெருமையும் தூய்மையும் உடையது என்று சற்று ஆராயுங்கள். அரன் எல்லாவற்றிலும் பெருமை யுடையவன். அதைப்போலவே தூய்மையும் உடையவன். அவன் எழுந்தருளியிருக்கும் இருக்கை ஆலயமாகும். அதுவும் அரனைப்போல இருப்பது என்றால் அதுவும் பெருமையும் தூய்மையும் உடையது ஆகும். அது தொழுபவர் நெஞ்சில் மட்டும் அல்ல. உண்மையாகவே இருக்கவேண்டும். அல்ல. அது அளவுகடந்த பெருமையும் தூய்மையும் கொண்டிருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால்தான் மக்கள் அதனை அரனெனத் தொழுவார்கள். ஆகவே ஆலயத்தைக் கட்டி அதிலரனை யெழுந்தருளிவிக்கும் மக்கள் அவனைப்போலவே ஆலயத்தையும் பெருமையும் தூய்மையும் உடையதாகச் செய்ய வேண்டும்.

**பெருமையும் தூய்மையும் :** நமது ஆலயங்கள் பெருமையும் தூய்மையும் கொண்டிருக்கின்றவா ? அவைகளி லும் மிதமீறிய தன்மையும் கொண்டிருக்கின்றனவா ? அவ் வாறு கொண்டிருந்தால்தானே நாம் அந்த அருமைக் கருத் துக்குப் பாத்திரங்கள் ஆவோம். அப்படியில்லாதவரை நாம்

அந்த ஆலயத்திற்கு உரிய அருகர்கள் ஆக மாட்டோம். கிறிஸ்தவர்களும் இசுலாமியர்களும் தங்கள் தங்கள் ஆலயங்களைப் பெருமையிலும் தூய்மையிலும் வைத்திருப்பது கண் கூடு. ஆகவே அங்கே அச்சமயத்தினர் தொழுதற்கு உரியவர்கள் ஆவார்கள். நம் ஆலயங்களில் தற்கால நிலைமையைக் கண்டால் அந்தக் கருத்தே இல்லாதவர்கள் என்று எண்ணப் பட்டவர்கள் ஆவோம். இந்த முறையில் நாம் வாளா இருக்காமல் நம் ஆலயங்களின் நோக்கத்தை அறிந்து அவைகளைப் பெருமையிலும் தூய்மையிலும் இலங்க வைப்பது நமது கடமை.

**அவைகளின் நோக்கம் :** ஆலயங்களைக் கட்டின நமது முன்னோர்கள் அவ்வாலயங்களை என்ன நோக்கத்துடன் கட்டினார்கள் என்றும், அவைகளை என்ன முறையில் அந் நோக்கங்களில் இருத்திவைக்க வேண்டும் என்று விரும்பினார்கள் என்றும் அன்னோர்கள் வெகு தெளிவாகவும் உறுதியாகவும் கூறியிருக்கிறார்கள். ஆலயங்களில் ஒரு சிறிது பழுது ஏற்பட்டாலும் அவைகள் பெருமையிலும் தூய்மையிலும் கெட்டுவிடுமல்லவா ? கட்டினவர்கள் தாம் இருக்கும்போது அந்தப் பண்புகளில் அவைகளை வைத்துக்கொள்ள முடியும். இறந்த பிறகும் அதே நிலையில் இருக்கவேண்டும் என்றெண்ணிப் பெருந்தொகைகளையும் நிலங்களையும் கொடுத்து எழுதிவைத்தார்கள். ஆகவே நிரந்தரமாகப் பெருமையும் தூய்மையும் அவைகளில் படரவேண்டும் என்பது அவர்கள் கருத்து. இதை நெஞ்சிற்கொண்டு கல்லிலும் அக் கருத்தைத் தீட்டிவைத்தார்கள். அவர்களுடைய கருத்தின் நோக்கம் இதனாற்றெரிகின்றதன்றோ ?

**கட்டினவன் கருத்து :** தென் பாண்டி நாட்டில் மிகச் சிறப்போடு ஆண்ட பராக்கிரம பாண்டியன் (கி. பி. 1422 முதல் 1463 வரை) தான் மனத்தால் உருவப்படுத்திப் பின் கல்லால் எழுப்பின தென் காசி விசுவநாதர் கோயிலில் ஒரு கல் பழுதுபட்டாலும் அதனை எவராவது தூய்மைப் படுத்தினால் அவருடைய தாள்கள் தன் தலை மேலன என்று கருதிக் கல் எழுத்தில் வெளியிட்டான் என்றால் அவன்

மேன்மையான நோக்கம் எத்தனை பெருமையுடையது பாருங்கள். அவன் எழுதிய கருத்தைத் தெளிவுபடக் கூறும் பாடல்,

“ ஆராயினுமிந்தத் தென்காசி மேவும்பொன் னாலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனை
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்ரம பாண்டியனே ”

என்பதாகும். அவன் கருத்தைப் பின் வந்த மக்கள் போற்றினார்களா ? அந்தோ அக்கோயில் என்ன பரிதாபமான நிலையில் தற்போது இருக்கிறது.

**பராமரிப்பு :** நமது குடியிருப்பு வீட்டைச் சிறிது குப்பையோ பொத்தலோ இல்லாமல் தூய்மையாக வைக்கிறோம். படங்களை மாட்டிக் கோலம் வரைந்து அழகு படுத்துகிறோம். இறைவன் வசிக்கும் பெருமை பொருந்திய கோவிலை (கோ+இல்) என்ன நிலைமையில் வைத்திருக்க வேண்டியது நமது கடமை ? இறைவன் அகில அண்டத்திற்கும் முதல்வன். ஆகையால் அவனை எழுந்தருளச் செய்யும் புனித இல்லத்தை மிகத் தூய்மையாக வைத்திருக்க வேண்டாமா ? அதற்காக அறக் காப்பாளர்களை அரசியலாரும் நியமித்துள்ளார்கள். அவர்கள் கடமை என்ன ? ஒரு சிறிதாவது பழுது ஏற்பட்டால் உடனே செப்பனிட வேண்டும். பணமில்லை என்று கூறுவது வெறும் சாக்கு. தம்மால் முடியாவிட்டால் அப் பதவியை விட்டுவிடுதலே முறையாகும்.

**நந்திகேசர் ஆலயம் :** திருச்சிவட்டம் துறையூருக்குச் சென்றேன். அங்கே நந்திகேசுவர ஆலயம் என்ற பெருமை பெற்ற ஆலயம் இருக்கிறது. அந்தப் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் எழுத்தின் பிறப்பைப் பற்றிய வடமொழிச் சுலோகம் நமது மனத்தில் தோன்றும். அதனை நந்திகேசுர ஆகமம் கூறுகிறது. நடராசப் பெருமான் நிருத்தம் ஆடின காலத்தில் அவரது திருக்கையிலிருந்த ‘டங்கா’ என்ற துடி ஒலி செய்ததாம். அவ்வொலியிலிருந்து

இருபத்தைந்து (25) எழுத்துக்கள் பிறந்தனவாம். அவ் வெழுத்துக்களே உலகில் உள்ள எல்லா மொழிகளுக்கும் காரணம் என்பர். அந்தச் சுலோகமாவது.

" நிருத்த வசானே நடராஜ ராஜோ
நநாத டங்காம் நவபஞ்ச வாரம்
உத்தர்த்துகாம சனகாதி சித்தான்
எதத் விமர்சோ சிவசூத்ர ஜாலம் "

**பழுது பார்க்கப்படாமை :** ஆகவே வடமொழி இலக்கியத்திற்குக் காரண முதலாயுள்ள பெயரில் விளங்கும் இத் திருக் கோயிலின் உள்ளே சென்றால்—என்ன காண்கிறோம். நல்ல கருங்கல்லால் கட்டப்பட்ட சுற்றாலைகளையும் மண்டபங்களையும் கொண்டிருந்தும் வேண்டாத இடங்களில் அழகைக் கெடுக்கும் கோணற்றூண்கள் அங்கங்கே முட்டுகளாக நின்று ஆலயத்தின் சிறப்பைக் கெடுக்கக் காண்கின்றோம். ஊன்றிப் பார்க்கையில் அத்தூண்கள் பிளவுபட்ட விட்டங்களைக் கீழேவிட ஒட்டாமல் தடுத்து நிற்கின்றன என அறியலாம். தட்சிணாமூர்த்திக் கருகிலொன்றும் சுப்பிரமணியர் சன்னதிக்கெதிரில் குத்தலாக ஒன்றும் மற்ற தேவர்களையும் தேவதைகளையும் மறைக்கும் மற்றும் சிலவும் இந்த ஆலயத்தைக் கெடுத்துக்கொண்டு நிற்கின்றன. யாதோ ஒரு காரணத்தால் விட்டங்கள் உடைந்து விட்டன. வேறு விட்டங்கள்போட வகையின்றி முட்டுத்தூண்கள் நிறுத்தியிருக்கிறார்கள். பின் காலத்திலாவது திருப்பணி செய்ய நினைத்தார்களா ? இல்லவேயில்லை.

**தென்னாட்டில் அபவாதங்கள் :** இப்படிப்பட்ட காட்சிகள் இந்தக் கோயிலில் மட்டுமோ ? இதைப்போல நூற்றுக் கணக்கான, ஆயிரக் கணக்கான கோயில்களில் நிகழ்ந்திருப்பதை நாம் காண்கிறோம். ஆலயத்திற்குச் செல்லும் மக்கள் தினந்தோறும் பார்த்துக்கொண்டேயிருக்கிறார்கள். அவர்கள் இருந்த அலங்கோலங்களை நினைப்பதேயில்லை. திருவிழாக் காலங்களில் விழாக்களைக் காணச்செல்லும் ஆயிரக்கணக்கான மக்களும் இதனைப்பற்றிச் சிந்திப்பதேயில்லை. பக்தியுள்ள

வர்கள் பக்தியில் மட்டும் ஈடுபடுவார்கள். பாமரர்கள் விழா வினைக் கண்டு களித்து விட்டுச் செல்வார்கள். இறைவன் கோயில் நன்ருக இருக்கவேண்டும் என்ற எண்ணம் அவர் களுக்கு இல்லவேயில்லை. சமய நிலையங்களை வயிற்றுப் பாட்டுக்காக வைத்துக்கொண்டு பிழைப்பவர்கள் கட்டிட நிலையைப்பற்றி ஏன் அக்கறை கொள்கிருர்களோ ?

**சிற்பப்பெருமை :** ஆனல் நந்திகேசுவரர் ஆலயத்தை மேலும் பார்க்கத் தொடங்கின் மற்ருெரு பெருமை தோன் றும். நடராசப் பெருமான் எழுந்தருளியிருக்கும் சபா மண்டபத்தைக் காணும்போது அங்கே தூண்களில் உள்ள திருவுருவங்கள் அன்பர்களுடைய நெஞ்சகங்களைக் கவருந் திறத்தன. வேலூர் சலகண்டேசுவரர், பேரூர் பட்டீசுவரர் மண்டபங்களிலுள்ள அருமையான சிற்பங்களை இங்கு காணு விட்டாலும் இரண்டு விலைமதிக்கவொணுத் திருவுருவங்கள் அச்சபையை அலங்கரிப்பதைக் காணலாம். பெருமானின் வலது பக்கத்தில் முருகக் கடவுள் மயில்மீது எழுந்தருளி யுள்ள காட்சி நெஞ்சையள்ளும் பெற்றிமையுடையது. இடது புறத்தில் வீற்றிருக்கும் திருவுருவம் கலைமகளின் அழகிய தோற்றம். பளபளப்பான கருஞ் சலவைக்கல்லில் கலைமகள் கையில் வீணைவாசித்துக்கொண்டு வீற்றிருக்கிருள். திரு முகம் வசீகரமானது. இருக்கும்நிலை மிக அழகியது. இத் திருவுருவத்தை ஏனே இங்கே சிற்பியமைத்தான்.

**கலைமகள் திருவுருவம் :** நடராசப் பெருமானின் திருக கூத்துக்குக் கலைமகளா வீணை வாசிக்கிருள் ? இருக்கலாம் என்று சிற்பி நினைத்தான் போலும். அர்ச்சகரைக் கேட் டேன். அவர்கட்கு இந்தக் கேள்விக்கு விடை எவ்வாறு வரும் ? மௌனம் சாதித்தார். நாரதரல்லவோ பெருமான் திருக்கூடத்துக்கு யாழ் வாசிப்பவர் என்று வில்லி கூறுகிருர்.

“ மான்புரிந்த திருக்காத்து மதியிருந்த நதிவேணி மங்கை பாகன்
தான்புரிந்த திருக்கூத்துக் கிசைய மகிழ்ந்திசை பாடும் தத்வஞானி ”

என்று நாரதரைப் பற்றியல்லவோ அந்நூலோர் கூறுகிருர். இந்தக் கோயிலிலே ஐதிகம் வேருய் இருப்பதன் காரணம்

என்ன ? காரணம் கிடக்கட்டும். கலைமகளுடைய திருவுருவம் எந்த வனப்பைக் கொண்டிருக்கிறது ? நமது பொது மக்கள் அறிகிறார்களா ? அறக்காப்பாளர்களே அறியாவிட்டால் பொது மக்கள் எவ்வாறு அறிவார்கள் ?

**பழமலைச் சிறப்பு:** துறையூர் நந்திகேசுவரப் பெருமான் கோயிலைப்போலவே எத்தனையோ கோயில்கள் பல அரிய பெருமைகளைக் கொண்டிருக்கின்றன. ஒரு முறை விருத்தா சலம் பழமலை நாதர் கோயிலுக்குச் சென்றேன். அங்கே அம்மன் கோயில் சுற்றுலையில் பெண்பால் நரசிங்கம் இருந்ததைக் கண்டு அதனைப்பற்றி விளக்கம் பெற ஒரு கட்டுரையும் நமது சித்தாந்தத்தில் எழுதியுள்ளேம். இதுவரை அதற்கு யாதொரு விடையும் வரவில்லை. பாடல் பெற்ற தலங்களில் மட்டும் நமது கவனம் இதுவரையில் மிகுதியாகச் சென்று கொண்டிருந்தது. ஆனல் பாடல் பெருத வைப்புத்தலங்களிலும், புராணத் தலங்களிலும் கல்வெட்டுத் தலங்களிலும் கணக்கற்ற, அற்புதத் தோற்றங்கள் இருக்கின்றன. அவைகளை நன்கு தேர்ந்து பொதுமக்களுக்கு விளக்க வேண்டாமா ?

**திருச்சிவட்டம் மற்ற கோயில்கள் :** திருச்சி மாவட்டத்தில் வடபகுதி பெரும்பான்மையும் புன்செய் நிலப்பாங்கானது. முல்லையும் குறிஞ்சியும் படர்ந்த பகுதியாகும். இங்கே கோவில்கள் சாதாரணமானவை. ஆகவே இங்கே அற்புதங்கள் இல்லையென்று எண்ணி அங்கு யாத்திரை செல்வதில்லை. திருப்பட்டூரில் (திருப்பிடவூர்) சாத்தனார் கோயிலும் ஊற்றத்தூர் முருகன் குன்றும் பார்த்து மகிழத்தக்கவை. வெங்கலூர் (வெங்கை) பழ மலைநாதர் கோயில் சிவப்பிரகாசரால் புகழ்ப்பெற்றது. “ வெற்றியாகிய முத்தி தந்தருள் வெங்கை மாநகர் ” என்றல்லவோ அவர் புகழ்ந்திருக்கிறார். அங்கே கருணைப் பிரகாசர் சமாதி என்ன நிலையில் இருக்கிறது ? யார் காண்கிறார்கள். இதைப்போல பல கேள்விகளையும் யாம் கேட்டுப் பெருமிதம் அடைவது எப்போது ? ஆராயுங்கள் ?

——

# பாவனையின் பயனே பக்தியின் விளைவு

மா. ப. தியாகன்

"யத்பாவோ தத்பவதி"; "As you think so you become" "எண்ணியது எண்ணியாங் கெய்துப எண்ணியர் திண்ணியராகப் பெறின்" "மனம்போல மாங்கல்யம்" என வடமொழியிலும் தமிழ் மறையிலும் தமிழ் ஆங்கிலப் பழமொழிகளிலும் கூறக்காண்கிறோம். எனினும் நாம் நாள் முழுதும் பாவிப்பது பத்திரிகைகளில் காணும் செய்திகளும், சுவர்களில் கண்கவரும்படி காட்சி அளிக்கும் சல்லாபப் படங்களும், இங்கு வண்டி கவிழ்ந்தது, அங்கு கொள்ளை போயிற்று, இங்கு கொலை நடந்ததெனும் செய்திகளும், இன்னோரன்ன பிற விபத்துகளும் ஆபத்துகளுமேயாம். ஐம்புலனாகிய கடாக்கள் மனக் கொட்டகையில் இவ்வாறான சாணம் கோமயம் முதலிய குப்பைகளையும் மலங்களையும் சேமித்து அசுத்தப்படுத்துகின்றன. பட்டினத்தடிகள் இதே கருத்தைத் திருக்கழுமல மும்மணிக் கோவையில் பின் வருமாறு கூறுகிறார்கள்.

"கருமுதற் றொடங்கிப் பெருநா ளெல்லாங் - காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனுந் தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை - யரிதினிகழ்ந்து போக்கிப் பொரு திறன் மையிருணிறத்து மதனுடையடு சினத்தைவகைக் கடாவும் யாப்பவிழ்த்தகற்றி — யன்புகொடு மெழுகி யருள் விளக்கேற்றித் — துன்பவிருளைத் துரந்து முன்புற மெய் யெனும் விதானம் விரித்து நொய்ய — கீழ்மையிற் றொடர்ந்து கிடந்தவென் சிந்தைப் — பாழறையுனக்குப் பள்ளியறை யாக்கிச் சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு — எந்தை இருக்கஇட்டனன்"

அப்படி மனத்தை அன்புகொடு மெழுகுவதற்கு நல்ல உணர்ச்சிகளைத் தருவதற்காக ஏற்பட்டுள்ள திருக்கோயில்களுக்குச் சென்று ஆங்கு எழுந்தருளிய மூர்த்தியினை "நன்றுடையான் தீயதிலான் நரைவெள்ளேறுடையான்" என்றெல்லாம் பாவித்து, அலங்காரங்களென்ன, மங்கள கோஷங்களென்ன அடியார்கள் கூட்டமென்ன, இன்னிசை பாராயணங்களென்ன நல்ல நைவேத்தியங்களென்ன இப்படி

யாக ஐம்புலன்களுக்கும் ஊட்டவல்ல உபாயங்களைப் பயன் படுத்திக்கொண்டு வருவதே மனமாசுகளைக் களைந்தெறியும் வழியாகும். ஆலயவழிபாட்டில் நல்லுணர்ச்சியைப் பெறு வதைவிட்டு ஆலயமூர்த்தியை ஒரு குறியென்றோ அல்லது அடையாளமென்றோ கொள்வோமேயானால் அது நமக்கு அவ்வாறே பயனளிக்கும். அது சிற்பியினால் செய்யப்பட்ட கல்லென்று பாவித்தால் அப்படியான பலனைத்தான் நாம் பெறமுடியும். கண்ணப்பர் காளத்தி மலையிலே அதே கற் சிலையை எவ்வாறு கண்டார்கள் ?

விறகிற்றீயினன் போலவும், பாலிற்படு நெய்போலவும் மாமணிச் சோதிபோலவும் கண்டார். உணர்வுக் கயிற்றினால் கடைந்தார். அவ்வுருவம் தனித்திருந்தமைக்குப் பதைத்தார். உண்டி கொடுப்பாரின்றி அவ்வுருவம் இளைத்திருப்பதுபோல் கண்டார். அப்பசியை நீக்க இறைச்சியை அமுது செய்து படைத்தார். வாய் கலசமாக நீர் கொணர்ந்து அர்ச்சித்தார். அவருடைய அன்பின் செயல்களுக்கு அக் கல்லுருவமாய காளத்தியப்பன் கசிந்து உதிரக்கண்ணீர் உகுத்தனர். கல்லும் கனிந்ததல்லவா ? அதைத் தடுக்க ஊனக் கண்ணையப்பினார். " அன்பிற்குமுண்டோ அடைக்கும் தாழ் " அதைத் தடுக்க மற்றொரு கண்ணில் உதிரக் கண்ணீர் பெருகிற்று. அதையும் மற்றொரு கண்ணால் தடுக்க முயன்றார். அதனால் நின்று விடுமோ அவ்வன்பின் பெருக்கம் ? அவ்வன்பு அருளுருவாய் கற்சிலையினின்று வெளிப்பட்டு "நில்லு கண்ணப்பா " என்று அலறியது. அலறி அவரை ஆட்கொண்டது. அவ்வாறு ஆறு நாளில் சிவனருள் கற்சிலையினின்றும் கடைந்தெடுக்கப்பட்டது கண்ணப்பர் கொண்ட பாவனையின் திண்மையன்றோ ? கண்ணப்பருடைய நெஞ்சம் எவ்வாறு பதைத்தது. "வேனில் வேள் மலர்க்கணைக்கும் வெள்நகைச் செவ்வாய்ப் பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் மக்களுடைய பாழ்நெஞ்சம்" போன்றல்லவோ, பதைத்தது. ஒவ்வொருவருக்கும் அப் பதைப்புறல் அனுபவம் உண்டு. அதை ஆண்டவன்பால் செலுத்தினால் அதுவே பக்தி நிலையாகும். மாதர்பால் எழும் எழுச்சி பல ஜன்மப் பழக்கத்தால் வந்ததன்றோ ? அதே

போல் இறைவன்பால் அன்பாகிய எழுச்சி எழவேண்டு மாஞல் நாம் நல்லமுறையில் பாவிக்கப் பழகுதல் வேண் டாவோ? "பழக நான் அடிமை செய்வேன் பசுபதி பாவ நாசா" என்று அப்பர் கூறவில்லையா? "பார்த்த இடமெல் லாம் பரமன்காண்" என்று சான்ருேர் கூறுவதின் பொரு ளென்ன?

ஒரு மரத்தைப் பார்க்கிருேம். அது சிவலிங்கமாகவா நமக்குத் தோற்றமளிக்கும். அவ்வாறு வேற்றுருவமாகக் காண்பதையா அவர் கூறுகிருர்கள்? அல்ல. அது மழை வெய்யில் இலையுதிர்காலம், இளவேனிற்காலம் எல்லாக் காலங்களிலும் தளர்வின்றி நிற்றல்போல, நாம் வினைவழி வரும் இன்ப துன்பங்களைப் பொருட்படுத்தாது இறைவ னுடைய இல்லமே நமது சொந்த இடமென எண்ணுவதே யாகும். இறைவனைச் சார்ந்திருக்கிருேம் என்று உறுதி கொள்ளல் வேண்டும். திருக்குளத்தைத் திருவண்ணுமலையில் கண்ட மாணிக்கவாசகருக்கு அது என்ன தோற்றமளித்தது? "எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த பொங்கு மடு" என்று அவர் திருவெம்பாவையில் பாடுகிருர்கள். நாம் குளத்தைக் கண்டவுடன் கோயிலதிகாரிகள் அதைச் சரிவரப் பாதுகாப்பதில்லையென்றும் அங்கு மக்கள் செய்யும் அசுத்தங்களையுமே காண்கிருேம். ஆக எதையும் காணும் பொழுது நல்ல பாவனையுடன் காணவேண்டும். முக்கியமாக ஆலயங்களுக்குச் செல்லும்போது ஆலய மூர்த்திகளை ஒரு குருவைச் சென்று வணங்குதல்போல் வணங்கவேண்டும். ஆலய தத்துவங்களை மனதிற்கொண்டு பிராகாரங்கள், துவஜ ஸ்தம்பம், பலிபீடம், திருநந்திதேவர், தூபி இவைகளைக் காணும்போது அந்த அந்தத் தத்துவங்களை மனதிற் பாவித்து வழிபடல் வேண்டும். இவ்வாருக தினம் பழகுதல் வேண்டும். "நிலைபெறுமா றெண்ணுதியே நெஞ்சே நீவா நித்தலும் எம்பி ரானுடைய கோயில்புக்குப் புலர்வதன்முன் அலகிட்டு மெழுகு மிட்டுப் பூமாலை புனைந்தேத்தி" வழிபடவேண்டும் என்றுஅப்பர் சுவாமிகள்கூறும் உபதேசமொழிகளை மனதிற் கொள்வாம்.

——

# மெய்கண்டார்*

இச் சிறந்த உலகத்தில், உயர்ந்த மக்கட் பிறப் பெய்திய நமக்கு விருப்பு வெறுப்பு எனும் இரண்டு முண்டு. நாம் விரும்புவதெல்லாம் நன்மையைப் பெறவேண்டு மென் பதற்கே. அப்படி விரும்பப்படும் பொருள்கள் பல உள. முயற்சி செய்தால் அவற்றைப் பெறலாம். முயற்சி செய் வதற்கு மனம், வாய், உடல் ஆகிய மூன்று கருவிகள் நம் மிடத்துள்ளன. அவற்றில் மனமே சிறந்தது. மனம் ஒரு கருவி. நாம் அதை உடையோம். கருவி உடையானுடைய ஏவற்படி நடக்கவேண்டியதாயிருக்க, நம் மனம் நம் ஏவற் படி கேட்கிறதில்லை. அதற்கு மாருக மனத்தின் வழியே நாம் செல்லுகின்ருேம். அதனுல் நாம் உடையார் என்ற நிலையும், மனம் நமது உடைமைப் பொருள் என்ற நிலையும் போய்விடுகிறது. உடைமைப் பொருளாகிய மனத்தை நம் ஏவற்படி நடத்தும் நிலை நமக்கு வரவில்லை. அந்நிலையைச் சம்பந்தர், நாவுக்கரசர் முதலிய பெரியோர்கள் அடைந் திருந்தனர்.

" தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்ததிலை யாகும்
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்ளுேடும் போதுகண் டாயே "

என்று திருமூலர், தம் ஏவற்படி நடவாததினுல் இடர்ப் பட்ட மனத்தைப் பார்த்து இரக்கங்கொண்டு அது நன்மை யடைதற்குத் தான் போமிடத்து வரும்படி அழைக்கிருர். தன் மனத்தை அவர் எங்கு அழைக்கின்ருர் என்று வினவின்,

" அறிவார் அமரர் தலைவனை நாடித்
செறிவார் பெறுவர் சிலர்தத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே "

---

*1937-ஆம் ஆண்டில் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம். கச்சி - முனிசாமி உடையார் குறிப்பெடுத்தது.

என்ற பாட்டில் பேரின்பத்தைக் காட்டுவிக்க வல்ல பெரியாரிடத்தில் சேரத் தன் மனதை அழைக்கின்ருர் என்பது விளங்குகின்றது. எனவே, நாம் நன்மையைப் பெறவேண்டின் நம் மனதைப் பெரியாரிடத்தில் செலுத் தல் வேண்டும். பெரியார் மிகுந்த அறிவுடையார்.

" அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்."

" எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு "

என்ற திருக்குறட் பாக்களால் பெரியவர்கள் மிகுந்த அறி வுடையவர்கள் என்பதும், பொருளற்றவற்றைப் பொரு ளாக மதியாது மெய்ப்பொருளேக் காண்பதே சிறந்த அறி வென்பதும் விளங்குகின்றன. மெய்ப்பொருளேக் கண்ட வர்கள் யாரோ அவர்கள் தான் பெரியவர்கள். இதனுல் மெய்கண்டாருடைய பெருமை விளங்குகின்றது.

இறைவன் அருளிய வேதத்தில் சிறியவர்களுக்கும் பெரியவர்களுக்கும் உதவும்படி சிறிய பொருள்களும் பெரிய பொருள்களும் பேசப்பட்டிருக்கின்றன. சிறிய பொருள்கள் தள்ளத்தக்கன. பெரிய பொருள்கள் கொள் ளத்தக்கன. இவ்வேதத்தில் அருமையாகப் பேசப்படுகின்ற பொருள் எதுவோ அதுவே குருவாகத் தோன்றி நந்திக்கு அருள, அந்நந்தி வழியில் வந்தது சிவஞான போதமாகும். அதை இயற்றியவர்தான் மெய்கண்டார். அவர் அந்நூலே நம் தாய்மொழியாகிய தமிழில் வழங்கினர்; வழங்கின தோடு நில்லாமல் அதை மற்றவர்கள் அறியும்படியும் உணர்த்தி, அதன் பயனுக அஞ்ஞானத்தைப் போக்கும் படிச் செய்தவர்.

சிவஞான போதத்தை மெய்கண்டார் சூத்திர ரூபமாக அருளினர். அருகிய எழுத்துக்களினல் பெருகிய பொருளே அறிவிப்பன சூத்திரங்கள். தமிழில் சூத்திர ரூபமாக உள்ள நூல்கள் வெகுசில. அவைகளும் இலக்கண நூல்கள். அறிவு நூல்களில் சூத்திர ரூபமாக உள்ளது சிவஞான போதமொன்றே.

" சிறிய ஆடியில் பெரிய மால்வரைப் பொருள் செறிந்தாங்கு
அறிவு நூல்களின் முடிவெலாம் அகத் தடக்கியதோர்
நெறியின் நீடிய நிகழ் சிவஞான போதத்தைக்
குறிய தீந்தமிழால் உரை குரவனைப் பணிவாம் "

என்ற செய்யுளால் இவ்வுண்மை பெறப்படுகின்றது.

மெய்கண்டார் காலத்திலேயே இருந்த அருணந்தி சிவாச்சாரியார், தாம் இயற்றிய இருபா இருபஃதில்,

" மண்ணிடையின் மாக்கள் மலமகற்றும்
வெண்ணெய் நல்லூர் மெய்கண்டார் "

" கண்ணகல் ஞாலத்துக் கதிரவன் தானென
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ "

" காரா கிருகக் கலியாழ் வேனைநின்
போரா இன்பத் திறுத்திய பெரும "

என்றமையால் ' மெய்கண்டதேவர் உலகத்திலுள்ள எல்லா மனிதர்களுடைய மலத்தை அகற்றுகின்றவர், தன்னை எதிர்ப்பட்டாருடைய அஞ்ஞானத்தைக் கதிரவன் தோன்றி இருளை ஒழிப்பதுபோல் போக்குகின்றவர், மேலும் எதிர்ப் படாதவர்களுக்கும் அழியாத இன்பத்தைத் தருகின்றவர் ' என்ற உண்மைகள் விளங்குகின்றன. மன வாசகங் கடந் தார் தாம் இயற்றிய உண்மை விளக்கத்தில்,

" பொய்காட்டிப் பொய்அகற்றிப் போதானந்தப் பொருளாம்
மெய் காட்டும் மெய்கண்டாய் "

என்றபடியால் மெய்கண்டதேவர் தம்மை அடைந்தோர்க் குத் தேகாதி பிரபஞ்சம் யாவும் பொய் என்பதைக் காட்டி, அதனல் அப் பொய் அறிவைப் போக்கி மெய்ஞ்ஞானத் தைத் தருகின்றவர் என்பதையும்,

" வித்தக மெய்கண்ட தேவர் "

என்றபடியால் அவர் நிறைந்த ஞானத்தை யுடையவர் என் பதையும் விளக்கிக் காட்டினர். மேற்கூறியவாற்ருல் மெய் கண்டாருடைய பெருமை விளங்கிற்று.

மெய்கண்ட தேவர் இருந்த காலத்தைப் பற்றிச் சற்ருராய்ந்து அவர் வரலாற்றில் செல்லல் இக்கால மரபின்

படி அவசியமாகும். மெய்கண்டாருடைய மாணவர் அருணந்தி சிவாச்சாரியார், அவருடைய மாணவர் மறைஞான சம்பந்தர், அவருடைய மாணவர் உமாபதி சிவாச்சாரியார். உமாபதி சிவாச்சாரியார் சாலிவாகன சகாப்தம் 1235-ல் இருந்தவர் என்பது அவர் இயற்றிய சங்கற்ப நிராகரணம் என்ற நூலால் தெரிகிறது. இப்போது நடப்பது சாலிவாகன சகாப்தம் 1859 (கி. பி. 1937) ஆகவே உமாபதி சிவம் இற்றைக்கு 654 ஆண்டுகட்கு முன் இருந்தவராவர். இவருக்குக் குரு பரம்பரையில் மூன்றாவதாக இருந்த மெய்கண்டாருடைய காலம் இற்றைக்கு 685 அல்லது 690 ஆண்டுகட்கு முன்னராம் என முடிவு கட்டலாம்.

நடு நாட்டிலே திருப் பெண்ணாகடம் என்ற ஊரில் அச்சுதகளப்பாளர் என்ற வேளாளர் பிள்ளைப்பேறின்மையால் பல தவங்கள் செய்தும் பலனற்றனவாகிவிடத் தம் குலகுருவாகிய சகலாகம பண்டிதரிடம் சென்று குறையிரந்து நிற்க, அவர் தமிழ்மறையாகிய தேவாரத்தில் கயிறு சாத்திப் பார்க்க,

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோ டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவர் ஐயுறவேண் டாவொன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"

என்ற திருஞான சம்பந்தர் தேவாரம் கிடைத்தது. இப்பாட்டின் கருத்தைக் குருவானவர் விளக்கிக் காட்ட அவராணையைச் சிரமேற்கொண்டு அச்சுதகளப்பாளர் தம் மனைவியுடன் திருவெண்காடடைந்து முக்குள நீராடிச் சிவபெருமானை வழிபடுவாராயினர். அவ்வழிபாட்டின் பயனாய் அவதரித்த பிள்ளைக்கு அவர்கள், அத்தலத்து இறைவன் பெயராகிய சுவேதவனப் பெருமாள் என்ற பெயரையே பிள்ளைத் திருநாமமாகச் சூட்டினர். பிள்ளை, திருவெண்ணெய்நல்லூரில் அம்மான் வீட்டில் வளர்ந்து வருங் காலத்தில் வயது மூன்றாயிற்று. அக்காலத்தில் ஒரு நாள் பரஞ்சோதி முனிவர் ஆகாய வழியாய்ச் செல்லும் போது, செலவு தடைப்பட்டமை கண்டு கீழிறங்கிச் சுவேதவனப் பெருமாளின் பக்குவத்தை யறிந்து மெய்ஞ்

ஞானத்தை உபதேசித்துக் குழந்தைக்கு மெய்கண்டார் என்னுந் திருநாமத்தையும் சூட்டிச் சென்றனர். மெய்கண்டார் தாம் உபதேச மூலமடைந்த பொருளைப் பொல்லாப் பிள்ளையாரிடம் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து தம்முடைய சீடர்களுக்குமுபதேசித்துச் சிவஞானபோதம் என்றொரு நூலையும் செய்தருளினர்.

சிவஞானபோதம் ஓர் அருஞ் செந்தமிழ் நூல். "உயர் சிவஞான போத" மென்றும், "யாரும் வெல்லாத சிவஞான போத" மென்றும் அதைத் தக்கோர் மதித்துள்ளார். சிவஞான போதம் என்ற சொற்றொடர் சிவம், ஞானம், போதம் என்னும் முச்சொற்களால் ஆக்கப்பட்டு இறைவன் அருளால் வரும் அனுபூதி ஞானம் அல்லது பரஞானத்தின் வேருய நூலாராய்ச்சியால் உண்டாம் ஆராய்ச்சி ஞானம் அல்லது அபர ஞானத்தை உணர்த்தும் நூல் எனும் பொருளைத் தருகின்றது. திருவாதவூரரை ஆட்கொள்ள இறைவன் மானுடச்சட்டை தாங்கி ஒரு சிவ யோகி வேடம் பூண்டு திருப்பெருந்துறையில் வீற்றிருந்தபோது அவர் கையிலிருந்த சுவடி யாதென்று வாதவூரார் கேட்கப் "பொய்ம்மையிலாச் சிவஞான போதம்" என்று இறைவன் அருள, "சிவம் எது? ஞானம் எது? போதம் எது?" என்ற மாணிக்கவாசகர் கேள்விக்கு "நின்ற சிவம் ஒன்று, அதனைத் தேர்தல் ஞானம், ஆராய்ந்து தெளிதல் போதம்" என்று சிவபெருமான் "சிவஞான போதம்" என்ற சொற்றொடருக்கு உரை கூறினர்.

சிவஞான போதத்தில் விளக்கப்படுவது வேதத்தில் சொல்லப்படும் ஆறு முடிவுகளில் ஒன்ருகிய சித்தாந்தமாம்.

"வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போ தாந்தமும்
ஓதத்தகு மெட்டி யோகாந்த அந்தமும்
ஆதிக்க லாந்தமும் ஆறந்த மாமே"

என்ற திருமந்திரப் பாட்டு ஆறுவித அந்தங்களை உணர்த்துகின்றது. இதில் சித்தாந்தத்திற்கு அடையாக "மிக்க" என்ற பிரயோகம் நோக்கற்பாலது.

"நித்தம் பரனே டுயிருற்று நீள்மனஞ்
சத்தமுதல் ஐந்துந் தத்துவத்தால் நீங்கிச்

சுத்த மசுத்தந் தொடராவகை நீனைந்
தத்தன் பரன்பால் அடைதல் சித்தாந்தமே ”

என்ற செய்யுளால் சித்தாந்த மெதுவென்பது விளங்குகின்றது. சித்தாந்தமென்ற சொல்லுக்கு முடிந்த முடிவு என்பது பொருள். வேதம், உபநிஷத் இவைகளில் கூறப்படும் முடிவான பொருள் சித்தாந்தமாம். இதைப் பின்பற்றி ஒழுகுதலின் பயனை,

“ சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தம் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தம் காட்டுஞ் சிவனையே ”

என்ற திருமந்திரச் செய்யுள் ஓதுகின்றது. மேற்கூறியவாற்ருல் நவமான வேதத்தின் முடிவு ஞான சித்தாந்தமாகு மென்பதும், உயிர்கள் பாசத்தினின்றும் நீங்கிப் பதியை அடைவதற்கு அதுவே ஒப்பற்ற நெறியாகு மென்பதும் பெற்ரும்.

ஆகமங்களும் புராணங்களும் சித்தாந்தத்தையே வற்புறுத்துகின்றன. உபநிஷத்தின் முடிவு சித்தாந்தம். அது வைதீகம், அவைதிகமன்று என்று மகுடாகமமும், சித்தாந்தம் வேதத்தின் சாரம் என்று சுப்ரபேதாகமும், சுருதி சாரம் சித்தாந்தம் என்று வாயுசம்ஹிதையும், ஆகமங்களில் முடிவாகச் சொல்லப்பட்ட பதி, பசு, பாசம் என்ற இரகசியமான பொருளாகிய சித்தாந்தத்தைத் தட்சிணமூர்த்தி சனகாதி முனிவர்களுக்குச் சொன்னர் என்று வடமொழி ஸ்காந்தமும் கூறுகின்றன. உமாபதிசிவம் சித்தாந்தத்தை “ வேதத் தலைதரு பொருள் ” என்ருர். குமரகுருபர சுவாமிகளும் சித்தாந்தத்தையே போற்றினர்.

வேதாகமங்களிலும் புராணங்களிலும் வடமொழிப் புலவர்களாலும் தென்மொழிப் புலவர்களாலும் விதந்தோதப்பட்ட சைவ சித்தாந்தத்தை விளக்கவந்த சிவஞான போதம் பொது, உண்மை என்றிரண்டு அதிகாரங்களால் அமைக்கப்பட்டது. பொதுவதிகாரம் பதிபசு பாசங்களின் பொது இலக்கணத்தையும், உண்மையதிகாரம் அவற்றின் சிறப்பிலக்கணத்தையும் சாற்றுகின்றன. பொது இலக்கணம் தடத்த இலட்சணம் என்றும் சிறப்பிலக்கணம்

சொரூப இலட்சணம் என்றும் சொல்லப்படும். ஒரு பொருள் மற்ருென்ருேடு கலந்துள்ள இலட்சணம் தடத்த மாம். வேருென்ருேடு கூடாதபோதுள்ள இலட்சணம் சொரூபமாம். பொது அதிகாரத்தில் முப்பொருள் உண்மை சொல்லப்படுகிறது. ஒரு பொருளேப் பிரமாணத்தாலும் இலட்சணத்தாலும் தெரிந்துகொள்ளலாம். பிரமாணம் பிரத்தியட்சம், அனுமானம், ஆகமம் என மூவகைத்து. பிரத்தியட்சம் புறப்புறச் சமயத்தாராகிய உலோகாய தருக்கே உரியதாதலால் அது சிறந்த பிரமாணமன்று. ஆகமப் பிரமாணம் மற்ற சமயத்தாருக்குந் தவிர சைவத் தில் மந்த அறிவுடையோர்களுக்கும் பொருந்தாது. எல்லா ராலும் கொள்ளக்கூடியது அனுமானப் பிரமாணமாகும். அனுமானத்தால் கண்டதைக் கொண்டு காணுதது நிச்சயிக் கப்படும். பொதுவதிகாரம் பிரமாண இயல், இலக்கண இயல் என்றிரண்டியல்களே உடைத்தாய்ப் பிரமாண இயல் மூன்று சூத்திரங்களால் கடவுள், உலகம், உயிராகிய முப் பொருள்களின் உண்மையை விளக்கி, இலக்கண இயல் மூன்று சூத்திரங்களால் உயிரின் இலக்கணம், உலகத்தின் இலக்கணம், கடவுளின் இலக்கணம் ஆகியவற்றைக் கூறு கின்றது. உண்மை அதிகாரம் சாதனம், பயன் எனு மிரண்டியல்களாலாகி, முதலியற்கண் மூன்று சூத்திரங் களால் சாதனம் செய்யுமதிகாரி, சாதனம் செய்யப்படும் பொருள், சாதனம் செய்யு முறை இவற்றை விளக்கி, இரண்டாவதியல் மூன்று சூத்திரங்களால் பாச விடுதி, ஈசனேயடைதல், சீவன் முத்தர் இலக்கணம் ஆகியவற்றைப் பேசுகிறது.

இந்நூல் அமைப்புக்கும் நூற்கலப்புக்கும் ஓர் இயை புண்டு.

"கல்லால் நிழல்மலே—வில்லார் அருளிய
பொல்லார் இணேமலர்—நல்லார் புனேவரே"

என்பது நூற்காப்பு. இக்காப்பு பன்னிரண்டு பதங்களா லாய நான்கடிகளேயுடைய ஒரு செய்யுள். நூல் பன்னி ரண்டு சூத்திரங்களாலாய நான்கியல்களேயுடைத் தென்ப தைக் காப்புச் செய்யுள் உணர்த்துகின்றது. முதலடியின் கடைச் சொல்லாகிய "மலேவு" என்பது "மலேவில்லார்"

என்று புணர்ச்சியால் சம்பந்தப்படுவது, நூலின் முதலிய லின் கடையும் இரண்டாவதியலின் முதலும் சம்பந்தப் பட்டுள்ளதைக் காட்டுகின்றது. முதலியலின் கடைச் சூத் திரமும் இரண்டாவதியலின் முதற் சூத்திரமும் பசுவைப் பற்றியே பேசுகின்றன.

கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் எனும் நான்கு சாதனங்களுள் கேட்டலும் சிந்தித்தலும் பொது அதிகாரத்தில் ஆறு சூத்திரங்களாலும், தெளிதலும் நிட்டை கூடலும் உண்மையதிகாரத்தில் ஆறு சூத்திரங்களாலும் விளக்கப்படுகின்றன. எனவே, பொது அதிகாரம் விஷயங் களை ஆராய்கின்றவர்களுக்குரிய தென்பதும், இரண்டதி காரங்களும் சாதன முடையார்க்குரிய தென்பதும் பெறும்.

இந்நூல் தமிழில் வழங்கப்பட்டதாதலால் தமிழ்நாடு இது வழங்கப்படுமெல்லையாகும். ஆனால் இஃது இக்காலத் துப் பல பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டுப் பல தேசங் களிலும் பரவப் பெற்றிருத்தலால், இந்நூற்கு வழங்கு மெல்லை கோலல் அரிது.

வேதாகமங்கள் பொருள்களை ஓரிடத்திற் சொல்வது போல் மற்றோரிடத்தில் சொல்வதில்லை. அவைகளை ஆய்ந்து ஒற்றுமை செய்து காட்டவே சிவஞான போதம் தோன் றிற்று. பொருள்களெல்லாம் மூன்று பிரிவுகளில் அடங்கும். அவை உலகம், உயிர், கடவுள் என்பனவாம். ஆனால் பல நூல்கள் பல திறமாக அவற்றைக் கூறுகின்றன. சுவாயம் புயம் என்னுமாகமம் சிவம், பதி, பசு, கர்மம், ஆணவம், சுத்த மாயை, அசுத்த மாயை எனப் பொருள்களை ஏழாக வும், பௌட்கரம் சிவத்தை ஒழித்து ஆறாகவும், பராக்யே யம் பதி, பாசம், ஆணவம், கர்மம், மாயை, என ஐந்தாக வும், சர்வஞ்ஞானோத்தரம் சிவம், பதி, பாசம், பசு என நான்காகவும், இரௌத்ரவம், மிருகேந்திரம் ஆகிய ஆகமங் கள் பதி, பசு, பாசம் என மூன்றாகவும் கூறுகின்றன. இவ் வாகமங்கள் அனைத்தும் ஒரே கருத்துடையனவா யிருப் பினும் பொருள்களைப் பலதிறப்படுத்திக் கூறினமையின் அவற்றை ஒற்றுமைப்படுத்திக் காட்டச் சிவஞான போதம் தோன்றிற்று.

நிலையில்லாத பொருள்களின் சம்பந்தமான பிறவிக்கு அஞ்சி நிலைத்த பொருள்களின் சம்பந்தமான இன்பத்தை நுகர விரும்புவோரே இந்நூல் கேட்க அதிகாரியாவர். சரியை, கிரியை, யோக நூல்களைக் கற்ற பிறகு இந்நூலைக் கற்றால் நூற்பொருள் நன்கு விளங்கும். அன்றேல், விபரீதமாகுமென்பது பெரியார் துணிபு. இதைக் கற்றலினால் அறியாமை நீங்க ஆராய்ச்சி ஞானம் உண்டாகும்.

இனிச் சிவஞான போதம் நிலைநாட்டுவது சுத்தாத்துவிதத்தை.

"பொய்கண்டார் காணாப் புனிதமெனு மத்துவித
மெய்கண்ட நாதனருள் மேவுநா ளெந்நாளோ"

என்னும் தாயுமானார் பாடல் இங்குக் குறிக்கத் தக்கது. சுத்தாத்துவிதம் என்று கூறற்குக் காரணம் சிவாத்வைதம், விசிட்டாத்வைதம், கேவலாத்வைதம் என்பவற்றினின்றும் வேறுபடுத்திக் காட்டற்காம். அத்வைதம் எனும் வடமொழிச் சொல் ந+துவைதம் எனப் பிரிக்கப்படும். 'ந' என்ற சப்தத்திற்கு "சப்தகல்பத்ருமம்" எனும் வடமொழி நூல் ஆறுவிதப் பொருள்களைக் கூறுகிறது. ஈண்டு வேண்டற்பாலன மூன்று பொருள்கள். அவை அன்மை, இன்மை, மறுதலையாகும். பிராமண குலத்திற் பிறந்தும் பிறப்பொழுக்கத்தினின்றும் தவறினானை அப்பிராமணன் என்று கூறுமிடத்து 'ந' என்னும் சொல் அன்மைப் பொருளில் வழங்கப்படுகிறது. அப்பிரகாசம், அமலம் என்றவிடத்து அது இன்மைப் பொருளில் வழங்கப்படுகிறது. அநீதி, அதர்மம் என்றவிடத்து அது மறுதலைப் பொருளில் வழங்கப்படுகிறது. ஆதிசங்கரர் அதை இன்மைப் பொருளில் கொண்டார். மத்வர்கள் மறுதலைப் பொருளில் கொள்கின்றனர். மெய்கண்டார் அன்மைப் பொருளில் வழங்குகின்றார். கடவுளுக்கும் உயிருக்குமுள்ள அத்வைத சம்பந்தத்தை மெய்கண்டார் விளக்கும் முறையே சிறந்த தோன்றுகும்.

இரண்டு பொருள்களின் சம்பந்தம் ஐக்கியம், தாதாத்மியம், சமவாயம், சையோகம் எனப் பலவகைப்படும். ஆற்று நீர் கடல் நீரோடு கலத்தல் ஐக்கியமாம். கடவுளும்

உயிரும் சம்பந்தப்படுவது இதைப்போல் அன்று. "என்றுந் தெய்வம் தெய்வமே" என்றபடியால் உயிர் கடவுளோடு கூடிக் கடவுளாகாது. ஒரு மலரின் நிறம் அம்மலர் வடிவமாயிருத்தல் தாதான்மியமாம். இது குணகுணி சம்பந்தமாகும். அதாவது குணியின் ரூபமாய்க் குணம் இருத்தல். உயிர் கடவுளின் குணமல்லவாதலாலும், உயிர் ஒரு குணி, கடவுள் ஒரு குணியாதலாலும், குணியும் குணியும் கூடுதல் தாதான்மியம் அல்லவாதலாலும், கடவுளும் உயிரும் சம்பந்தப்படுவது தாதான்மியமன்று. இதையே தார்க்கிகர்கள் சமவாய சம்பந்தமென்பர். சையோகமாவது விரலும் விரலும் கூடுதலாம். ஈண்டு விரல் முழுமையுங் கூடுதலில்லை. கடவுளும் உயிரும் சம்பந்தப்படுதல் இதுவெனின், பூரண வியாபகமுடைய கடவுள் தன்மைக்குக் குறையேற்படுமாதலின் அது சையோகமன்று. உயிர் ஏகதேச வியாபகமுடையதாதலின் அகண்டத்தில் கடவுளோடு முழுமையுங் கூடாது. இனி மெய்கண்டார் கூறும் அத்துவிதம் யாதென்பதாராய்வாம். முற்கூறிய தாதான்மிய சம்பந்தம் இருவகைப்படும். சூரியனும் கிரணமும்போல் ஒரே பொருள் குணியாகவும் குணமாகவுமிருந்து இரண்டாய் நிற்றற்கு ஏதுவாயிருப்பதொன்று. ஈண்டு பிற பொருள்களைப் பார்க்கச் சூரிய கிரணம் இன்றியமையாதெனினும் சூரியனைப் பார்கக அவனே துணையாயிருப்பதை அறிகிறோம். வேறுபட்ட இரண்டு பொருள்கள் ஒன்றுகூடி இரண்டல்லாத் தன்மையை எய்தல் மற்றொருவித தாதான்மியமாம். தாள் தலை என்ற இரண்டு வேறுபட்ட சொற்கள் புணரும்போது தாடலை என்றாகிறது. இங்கு டகரம் ஒரு எழுத்தன்று. இரண்டு எழுத்துக்கள் ஒன்று சேர்ந்து ஒன்றாகாமலும் இரண்டுமல்லாமலும் நிற்கிறது. இதைப்போல் கடவுள், உயிர் ஆகிய இரண்டு வேறுபட்ட பொருள்கள் ஒன்று கூடும்போது ஒன்றாகாததும் இரண்டல்லாமையுமாகிய நிலையை எய்துகின்றன. இதுவே மெய்கண்டார் கூறும் அத்துவிதமாம்.

மேலும், பாணினி வியாகரணத்திற்கு உரை செய்த பதஞ்சலியார் அகரத்தை அன்மைப் பொருளிலேயே எடுத்தாளுகிறார். துவைதம், அத்வைதம் என்பன எண்ணுப் பெயர்ச் சொற்கள். வடமொழியில் 'அ' என்பது ஒன்று

இரண்டு என்னும் எண்களின்மேல் தவிர மற்ற எண்ணுப் பெயர்கள்மேல் வாராது. (அ+ஏகம்=அநேகம்; அ+துவைதம்=அத்வைதம்) ஒன்று என்பதை உணர்த்த ஏகம் என்ற சொல் இருக்க, இரண்டன்மையை உணர்த்தும் அத்வைதம் என்ற சொல்லை உபயோகிப்பதே கடவுளும் உயிரும் ஒன்றுமல்ல இரண்டுமல்ல என்ற சித்தாந்த உண்மைக்குச் சான்ருகும். ஆனல் ஒன்றே என்று மறைகள் கூறுவது முற்றறிவுடைய பதியை. சிற்றறிவுடைய உயிர்கள் பாசத்தோடு கூடினமையின் கடவுள் ஆகா. உலகமோ அறிவற்றது. ஆயின் கடவுள் இல்லையேல் ஒன்றுமில்லை என்பது அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்ரும் என்பது போலாம். அகரம் மற்ற உயிரெழுத்துக்களையும் மெய்யெழுத்துக்களையும் இயக்குவதுபோல் கடவுள் அடிமைகளாகிய உயிர்களையும் உடைமையாகிய உலகத்தையும் இயக்குகிருர். கடவுள் இன்றேல் உயிரும் உலகமும் இயங்கா.

முதற் சூத்திரத்தில், காணப்படும் உலகைக்கொண்டு, காணப்படாத கடவுளை நிச்சயித்து, இவ்வுலகம் அவன் அவள் அது எனும் மூவகைப் பாகுபாடுடையதாய், தோன்றல், இருத்தல், அழிதல் ஆகிய முத்தொழிலுடையதாய், தோன்றுங்கால் தான் ஒடுங்குதற்கு ஏதுவாயிருந்த கடவுளினின்றும் தோன்றுகிறது என்று கூறி, இரண்டாஞ் சூத்திர முதல் அதிகரணத்தில் உலகத்தைத் தோற்றுவிக்குங்கால் கடவுள் உயிர்களோடு கூடி ஒன்ருயும், இரண்டாயும், ஒன்றிரண்டாயும் இருக்குந் தன்மையை ஆசிரியர் விளக்குகின்ருர். உயிரைப் பற்றியுள்ள மும்மலங்களில் ஆணவமலம் பரிபாகமாதற் பொருட்டு சிருட்டியும், கர்மமலம் பரிபாகமாதற் பொருட்டு ஒடுக்கமும், மாயாமலம் பரிபாகமாதற் பொருட்டு இரட்சணையும் ஆகிய முத்தொழிலைக் கடவுள் புரிகிருர். இச் செயல்களைப் புரியும்போது அவர் பதியாகின்ருர். இது கடவுளின் தடத்த லட்சணம் அல்லது பொது இயல்பெனப்படும். இத் தொழில்களைச் செய்யும் போது கடவுள் உயிருடன் கூடி நிற்கின்ருர். அப்படிக் கூடி நிற்கின்ற நிலை மூன்று விதப்படும். அவை அபேதம், பேதம், பேதாபேதம் என்பனவாம். உயிரும் உடம்பும் கூடியிருக்கும் நிலை அவ்வாறேயாகும். ஒருவன் “என்னை

அடித்தான்" என்றபோது உடலைத் தானாகவும், "என் உடம்பு" என்றபோது உடலைத் தன்னின் வேறாகவும், உடலுக்கிட்ட பெயரால் அழைக்கத் தான் செல்லலால் உடலுக்குடனாயும் இருத்தல் இவ்வுண்மையை விளக்குகிறது. உயிர்கள் உலகில் இருக்க உடலும் உயிரும்போல் அவற்றோடு கலந்து அவையாயிருந்து அபேதமாயும், அவை பொருள்களை அறிய அகரமும் மற்ற உயிர் எழுத்துக்களும் போல் வேறாய் பேதமாயும், அவை பொருள்களை அனுபவிக்கப் பண்ணும் இசையும் போலவும் பழமும் சுவையும் போலவும், அறிவும் கண்ணும் போலவும், உடனாய்ப் பேதாபேதமாயும் கடவுள் இருக்கிறார். ஆகவே, இறைவன் நாமாகவும், நம்மின் வேறாகவும், நம்முடனாகவும் இலரெனில் நாம் இருக்கவும், அறியவும் அநுபவிக்கவும் இயலாதென்பது பெறறாம். இனி இம் மூன்று நிலைகளையும் ஒரே உதாரணத்தில் விளக்க ஆசிரியர் உருக்கிய அரக்கையும் அதனோடு சேர்த்தணைத்த கற்பொடியையும் காட்டுகிறார். கற்பொடியானது அரக்கோடு கலப்பினால் ஒன்றாயும், பொருண்மையால் வேறாயும், நீக்கமின்மையால் உடனாயும் இருத்தல்போல் முதல்வன் உயிர்களோடு ஒருங்கு கூடி நின்று நீக்கமின்றி நிற்றலினால் தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம்.

ஆசிரியர் கடைசி சூத்திரத்தில் சீவன்முத்தர் இலக்கணங் கூறுகின்றார். இச்சை அறிவு செயல்கள் இறைவனுக்கும் உள, நமக்கும் உள, சீவன் முத்தர்க்கும் உள. இறைவன் அவைகளை உயிர்கள் காரணமாகச் செலுத்துகின்றான். நாம் நிலையில்லாத அற்ப இன்பத்தை அளிக்கும் உலகப் பொருள்கள் மாட்டுச் செலுத்துகின்றோம். சீவன் முத்தர்களோ தம்மை விட்டுக் கழிந்த மலம் சேராமலிருக்கும்படி இச்சையையும், அன்பரோடுகூட அறிவையும், அடியார் வேடத்தையும், ஆலயத்தையும் அரனெனத் தொழச் செயலையும் செலுத்துகின்றனர்.

——

# சிவஞான சுவாமிகள்*

இவ்வுலகில் நாம் பிறந்தது எதற்காக? நம் கருவி கரணங்களைக் கொண்டு நாம் செய்யவேண்டுவனவற்றைச் செய்தற்காகவேயாம். கருவி கரணங்களைத் தொழிற்படுத்தினுல்தான் நமக்கு மேன்மை உண்டு. இல்லையேல் உலகில் கிடைத்தற்கரிய மானிடப் பிறவியைப் பெற்றும் நாம் தாழ்வையே யடைவோம். இதுபற்றியே 'முயற்சியுடையார் இகழ்ச்சி யடையார்' என்ற முதுமொழியும் எழுந்தது. திருவள்ளுவரும்,

> " முயற்சி திருவினை யாக்கும் முயற்சியின்மை
> இன்மை புகுத்தி விடும் "

என்று கூறினர்.

ஒவ்வொருவரும் படுக்கையைவிட்டு எழுந்தவுடனே செய்யுங் காரியங்கள் மூன்று வகைப்படும். ஒன்று, நாம் இறைவனடியடைந்த பெரியோர்களை நினைத்தல் வேண்டும். இரண்டாவது, அன்று நமக்கு நேர உள்ள இடையூறுகளை நினைத்தல் வேண்டும். மூன்ருவது, இவ்விடையூறுகளை நினைத்தலோடு மட்டும் நிறுத்தாது அவைகளைப் போக்க ஆண்டவனை நோக்கி அழுதல் வேண்டும். இவையே நாம் தினந்தோறும் எழுந்த உடனே செய்ய வேண்டிய கருமங்கள். முன்காலத்தில், தினந்தோறும் எழுந்தவுடனே பஞ்சாங்கம் பார்க்கும் வழக்கம் இருந்து வந்தது. இது தின சுத்தி எனப்படும. அன்றைய தினத்தை மட்டும் கவனித்து விட்டுப் பஞ்சாங்கத்தைக் கீழே வைத்துவிடும் வழக்கம் பெரும்பான்மையோரிடம் இல்லை; பக்கத்து நாட்கள் மீதும் நாட்டம் செல்லும். அவ்வாறு பஞ்சாங்கத்தைப் பார்க்கும் பழக்கத்தை நாம் விட்டுவிட்டதால் பெரியோர்களைப் பற்றி மறந்துவிட்டோம்.

---

26—4—37-ல் மயிலையில் நிகழ்த்திய சொற்பொழிவு—திரு. நே. த. கிருஷ்ணசாமி முதலியார் பி.எ.,எல்.டி. அவர்களின் குறிப்பு.

இன்று சித்திரைத் திங்கள் ஆயில்ய நாள் ; இது, சிவஞான சுவாமிகள் திருநாள். சென்னைக்குச் சுமார் இருபது மைல் தூரத்திலுள்ள தொட்டிக்கலை கிராமத்தில் அவர்தம் திருவுருவம் அமைக்கப்பட்டிருக்கிறது. அவர்தம் பெயரிலிருந்தே நமக்கு வேண்டியதைப் பெறுகிறோம். நமக்கு வேண்டுவதென்ன ? சிவஞானம். அவர்கள் சிவஞான சுவாமிகள் ; சிவஞானத்தைத் தமக்குச் சொத்தாக உடையவர்கள். நாம் கேட்குந்தோறும் கேட்குந்தோறும் அவர் இல்லையென்னுது அவர்தம் உடைமையைப் பகிர்ந்து நமக்குக் கொடுப்பார். அப்பாகத்தை நாம் பெற முந்திக் கொள்வோமாக. சிவஞானமே எல்லா மதங்களின் முடிவாகும். இதை நமது சுவாமிகள், காஞ்சிபுராணத்தில் வெகு அழகாகக் கூறியிருக்கிறார்கள். 'விலகி வீழ் அருவித் தாரை.........ஏகமாய் கூடுந் தோற்றம்' என்ற செய்யுளில் ஒவ்வொரு மதத்தின் உண்மையும் வேகவதி நதியில் வந்து சேரும் ஒவ்வோர் அருவித் தாரைக்கு உவமையாகக் கூறப்படுகிறது. அவ்வருவித் தாரைகள் திரண்டு வேகவதி என்னும் நதியாதல்போல், இவ்வுண்மைகளெல்லாம் திரண்ட முடிபு சிவஞானமாகிறது. அத்திரண்ட முடிபையே பொருளாகக் கொண்டிருப்பவர் சிவஞான முனிவர்.

இனி சிவஞான முனிவரது பிறப்பு வளர்ப்பைப் பற்றிச் சிறிது கவனிப்பாம். தென் பாண்டி நாட்டில் பாபவிநாசத்துக்கு (பாபநாசம்) அருகில் விக்ரமசிங்கபுரம் என்றொரு கிராமம் உண்டு. அவ்வூரில் வேளாள குலத்திற் பிறந்த ஆனந்தக் கூத்தருக்கும், அவர்தம் அருமைப் பத்தினியாரான மயிலம்மையார்க்கும் பிறந்தவர் நம் சிவஞான முனிவர். நமது சுவாமிகளிடம் குழந்தைப் பருவத்திலேயே சிவபெருமான் பேற்றைப் பெறுதற்குரிய குணதிசயங்கள் காணப்பட்டன.

மக்களுக்குக் கல்வியை யூட்டுதல் பிதாவின் முதற் கடமையல்லவா ? ஆனந்தக் கூத்தர் தம் கடமையை நிறைவேற்ற எண்ணியவராய்த் தமது அருமை மகனாரைப் பள்ளியில் வைத்தார். ஒருநாள், சிவஞான முனிவரான குழந்தை பள்ளிக்குச் செல்லும் வழியில் விபூதிதாரணரான இரண்டு அடியார்கள் எதிரில் வரக்கண்டது. அவ்விருவரும் திருவாவடுதுறை ஆதீன அடிகண்மார். அவர்களைக் கண்டதும்

குழந்தை ஆநந்த பரவசம் மேலிட்டது ; பள்ளிக்குச் செல்வதை யொழித்து அவர்கள் இருவரையும் வீட்டுக்கு அழைத்துச் சென்றது. சிவஞான முனிவர் தந்தையில்லாததால், தாயாரிடஞ் சென்று அடியார்களை உண்பிக்கச் சொன்னார். அம்மையார் அமுது படைத்த திறத்தை நான் மயிலாப்பூரில் கூறவேண்டுவதில்லை. இவ்வூரார் அமுது படைக்குந் திறத்தைச் சம்பந்தரே புகழ்ந்திருக்கிறார். 'உருத்திர பல்கணத்தார்க்கு அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்' என்ற சொற்றொடரை அறியாதார் யார் ?

அம்மையாரின் அன்பைக் கண்ட சுவாமிகள் ஒரு பாட்டைப் பாடினார். அஃது, "அருந்ததி என்னம்மை" என்னுந் தொடக்கத்ததாகும்.

இப் பாட்டில் கருத்து, சொல், பொருள் முதலிய எல்லாம் அமைந்திருக்கின்றன. இப்பாட்டைக் குழந்தைப் பருவத்திலுள்ள சிவஞான முனிவர் எவ்வாறு பாடினார் ? இதற்கு முன் ஜென்மத்தில் அவர் எவ்வளவு புண்ணியம் செய்திருத்தல் வேண்டும் ! அவர் ஜீவன் முத்தர். ஒருவன் ஒரு ஜென்மத்தில் படித்தவை எழு ஜென்மங்கள் வரை அவனைப் பின்பற்றுகின்றன வென்பது பொய்யாமோ ?

மனிதர்களை மூன்று விதமாகப் பிரிக்கலாம். அவையே பிராகிருதர், வைநயிகர், சாமுசித்தர் எனப்படும். படித்தும் அறியாதவர் பிராகிருதர். வைநயிகர் படித்த பின் அறிபவர். படிக்காமலே அறிகிறவர் சாமுசித்தர். நமது சிவஞான முனிவர் மூன்றாவது வகுப்பைச் சேர்ந்தவர். அவர் பெரிய அநுபூதிமான். நினைத்தவுடனே பாடவல்லவர். அவர் பரிசாரகனுக்குக் கட்டளையிடுதற் பொருட்டுப் பாடிய பாட்டைக் கவனியுங்கள். அது, "சற்றே துவையலரை" என்னுந் தொடக்கத்தது.

ஒரு சமயம் சுவாமிகள் திருப்பாதிரிப்புலியூர்க்கு வந்தார்கள். அப் பதி திருநாவுக்கரசு சுவாமிகளைக் கடலினின்றும் கரையேறவிட்ட பெருமையுடையது. ஆங்குச் செல்வந்தன் ஒருவன் இருந்தான். திரிபு வகையில் ஒரு பாட்டுப் பாடுபவருக்கு நூறு பொன் தருவதாக அவன் நிச்சயித்திருந்தான். அவ்வூரில் ஓர் அந்தணன் ; நித்திய தரித்திரர் ; தம் மகனுக்கு உபநயனம் செய்ய விரும்பினார்.

பணத்துக்கு என் செய்வது? ஒன்றும் தோன்றவில்லை. ஒருநாள் அவர் சுவாமிகளைச் சந்தித்தார்; தமது குறைகளைக் கூறிச் செல்வந்தன் கட்டிவைத்திருக்கிற பொற்கிழியையும், அதன் வரலாற்றையும் கூறினார்; நமது சுவாமிகள் ஒருவித யோசனையும் செய்யாது உடனே ஒரு கவியை எழுதிக் கொடுத்தார். அது 'வரையேற விட்டமுதம்' எனத் தொடங்கிக் 'கரையேற விட்ட முதல்வா' என்பதோடு முடிகிறது. நினைத்த மாத்திரத்தில் பாட்டுப் பாடுவதே சிறந்த முறையாகும். சிலர் ஒரு கவிக்காகப் பல நாட்கள் வரை முயல்கின்றனர். அவர் பாட்டுப் பாடும் திறன் வரப்பெற்றவரல்லர்.

கடவுளே எல்லாச் சாமர்த்தியமும் கைவரப் பெற்றவர். அவர் பூரண அறிவுடையவர். மனிதர் குறைந்த அறிவுடையவர். அறிவு இருவருக்கும் பொதுவே. அதனாலேயே கடவுள் சர்வக்ஞன் என்று அழைக்கப்படுகிறார். மனிதன் கிஞ்சிக்ஞன் என்று அழைக்கப்படுகிறான்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள சம்பந்தத்தை வேறுவிதமாகவும் உவமைப்படுத்திக் கூறலாம். நம் மொழியில் கசடதபற என்ற ஆறு எழுத்துக்களும் வல்லெழுத்துக்கள் என்று கூறப்படுகின்றன. இவற்றில் கச தப என்ற நான்கு எழுத்துக்களே மொழிக்கு முதலில் வருவன. டறக்கள் மொழிக்கு முதலில் வாரா. கடவுள் கசதப முதலிய எழுத்துக்களைப் போன்றவர். உயிர்கள் டறக்கள்.

அகத்திய முனிவருக்குத் தொல்காப்பியர் முதலிய பன்னிரு மாணவர் இருந்தனர். அதுபோலவே நமது சுவாமிகளுக்கும் கச்சியப்பர் முதலிய பன்னிரு மாணவர் இருந்தனர். அம்மாணவருள் கச்சியப்பரே தலைசிறந்தவர்; தணிகைப் புராணம் முதலிய பல நூல்களை இயற்றியவர்.

நமது சுவாமிகள் மொழிபெயர்ப்பதில் திறமை வாய்ந்தவர்கள். சுவாமிகள் மொழிபெயர்த்த நூல்களில் சில 'அன்னம்பட்டீயம்', 'தருக்க சங்கிரகம்', 'சிவதத்துவ விவேகம்' முதலியனவாம். சொல்லுக்குச் சொல் மொழிபெயர்ப்பதே சுவாமிகளின் சாமர்த்தியத்தைக் காட்டுகிறது. 'நித்தியவஸ்து' என்பதற்கு மன்னிய மெய்ப்பொருள் என்றலும், 'பக்தி' என்பதற்கு 'மெய்யன்பு'

என்றலும் எவ்வளவு சிறந்த சொற்கள் பாருங்கள். முண்டகோபநிஷத்தில் வரும் ஒரு வாக்கியத்தைச் 'சிவனெனும் மொழியைக் கொடிய சண்டாளன் செப்பிடில் அவனுடன் உறைக' என்று மொழிபெயர்த்திருக்கிறார்.

விருத்தியுரை எழுதுவதிலும் சுவாமிகள் வல்லவர். இதை வடமொழியில் பாஷியம் என்று கூறுவது. தமிழில் சிவஞான முனிவருக்கு முன், ஒருவரும் விருத்தியுரை எழுதினது இல்லை. அதனாலேயே அவர் திராவிட மாபாடிய கர்த்தர் என்று அழைக்கப்படுகிறார்.

சிவஞான போதத்தின் காப்புச் செய்யுளைக் கவனிக்க. அது வருமாறு :

"கல்லா னிழல்மலை, வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர், நல்லார் புனைவரே"

இப் பாட்டை வஞ்சித்துறை என்பார்கள். இப்புத்தகம் நான்கு விஷயங்களைக் கூறுவது. அவை பிரமாணம், இலட்சணம், சாதனம், பிரயோசனம் எனப்படும். இந்நான்கு பொருளையும் குறிப்பதாகக் காப்புச் செய்யுளிலும் நான்கு அடிகள் இருக்கின்றன. செய்யுளின் கடைசியிலுள்ள ஏகாரம் இடைச்சொல். அதை நீக்க, அடி ஒன்றுக்கு மூன்று சொற்களாகச் செய்யுளில் பன்னிரண்டு சொற்கள் இருக்கின்றன. இப்பன்னிரண்டு சொற்களும் பன்னிரண்டு சூத்திரங்களைக் குறிப்பன.

இவற்றின் முன் ஆறு சூத்திரம் பொது. பின் ஆறு சூத்திரம் சிறப்பு. முன்னவற்றை அருளிய என்றும், பின்னவற்றைப் புனைவர் என்றும் சுவாமிகள் கூறுகிறார்கள். 'உண்ணிய' என்ற அப்பர் தேவாரத்திற்கு 'உண்ண' என்று பொருள் கூறுமாப்போல் 'அருளிய' என்பதற்கு 'அருள' என்று பொருள் கூறினர்.

சுவாமிகள், 'செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ்' என்ற வேறொரு நூலையும் இயற்றியிருக்கிறார். அதில் சமய உண்மைகளை அறிந்து கடவுளை வழிபடுதலை விளக்கி யிருக்கிறார். சுவாமிகள் நம்மை யெல்லாம் யானைகள் என்கிறார். யானைக்கு மூன்று மதங்கள் உண்டு. அவை கன்ன மதம், கபோல மதம், பீஜமதம் எனப்படும். நமக்கும் மூன்று

மலங்கள் இருக்கின்றன. அவை ஆணவம், கன்மம், மாயை. ஞானம் என்ற கட்டுத்தறியை அறுத்துச் செல்வது மதம் பிடித்த யானைக்கு முதல் அடையாளம். நாமும் அவ்வாறே அன்பு என்னும் சங்கிலியை உதறித்தள்ளி, அறிவு அல்லது அருள் என்னும் கூடத்தை விட்டு வந்து, புவனம் என்னும் கொடுங்காட்டில் ஓடுகிறோம்; எப்பாகர்க்கும் அடங்காது ஓடுகிறோம். அங்குச பாசத்தைக் கொண்ட விநாயகப் பெருமானாகிய பெரும்பாகனே நம்மை அடக்கவல்லவன். இக்கருத்தைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழில் 'மும்மலம்' என்ற தொடக்கப் பதிகத்தில் வெகு அழகாகச் சுவாமிகள் கூறியிருக்கிறார்கள்.

இவ்வாறு சுவாமிகள் தமிழுக்கும் சிவபெருமானுக்கும் செய்யவேண்டிய பல தொண்டுகளைச் செய்து விட்டுக் கி. பி. 1785-ம் ஆண்டு (ஏப்ரல் மாதம் 17-ம் நாள்) சித்திரை ஆயில்யம் கூடிய ஞாயிற்றுக்கிழமை பகல் 1–40 மணிக்கு இப்பூத உடலை நீத்துப் புகழ் உடலை எய்தினார்கள்.

---

# சைவ சமய அடிப்படைக் கொள்கைகள்

(மலர் - 30 ; இதழ் 10 ; 320-ம் பக்கத் தொடர்ச்சி)

பதி : உலகம் தோன்றி நின்று அழியும் தன்மையது; அறிவற்றது. ஆகையால், தானே முத்தொழில்களைச் செய்யாது. உயிர்களும், உலகத்தைப் படைத்துக் காத்து அழிக்கும் ஆற்றல் உடையன அல்ல. ஆதலின் இத்தொழில்களுக்குத் தலைவர் யாரோ அவரே பதி, அரசன், சிவம். படைத்தல்—காத்தல்—அழித்தல் செய்யும் கடவுளர் முறையே பிரமன் திருமால் உருத்திரன் அல்லவா ? அவர்களும் பதியின் ஆணை வழியில் நின்றே தம் தொழிலைச் செய்கின்றனர்; ஆதலின் இம்முத்தொழிலும் பதியின் தொழிலே. அதனால் இம் மும்மூர்த்திகளின் மேலானவர், பதி என்பது தெளிவாம். பதி ஒருவரே. ஆயினும் அவருடைய அருள் ஒளி எல்லாப் பொருள்களிலும், எல்லா உயிர்களிலும் கலந்து நிற்கிறது. ஆதலின் அவர் எங்கும் நிறைந்தவர். அவர் இருவினைக்கு உட்பட்டவர் அல்லர் ; ஆதலின் என்றும் இன்பம் உடைய

வர். பிறருக்குக் கட்டுப்பட்டவர் அல்லர் ; ஆதலின் தன் வயமுடையவர். ஐம்பூத காரியமாகிய உடலை உடையவர் அல்லர். ஆனால் தூய அருள் உடம்பினர். ஆணவ மலத்தால் மறைக்கப்படாத அறிவு உடையவர் ; இயற்கை உணர்வினர். ஏகதேச அறிவுடையவர் அல்லர் ; முற்றும் உணர்ந்தவர். ஆணவம் கன்மம் மாயைகளாய மும்மலத் தொடர்பு இல்லாதவர் ; ஆதலால் இயல்பாகவே பாசங்கள் நீங்கியவர். எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கும் ஆற்றல் உடையவர் ; ஆதலின் அளவற்ற ஆற்றலுடையவர். உயிர்கள் இடத்துப் பரம கருணைகொண்டு தனு கரண புவன போகங்களைக் கொடுப்பவர். ஆதலால் பேரருள் உடையவர். இத்தகைய பதி உயிர்களுக்கு ஓய்வுகொடுக்கும் பொருட்டு, உலகத்தை அதன் காரணமாம் மாயையில் ஒடுக்கும் தொழிலாகிய அழித்தலை உருத்திரர் மூலம் செய்கின்றவர். ஆதலால், அரன் எல்லா உயிர்களுக்கும் நன்மையையே புரிபவர் ஆதலால் அவர் சிவன். சிவனுடைய ஒரு கூறு உருத்திரர். ஆனால் உருத்திரனே சிவன் அன்று. சிவன் மும்மூர்த்திகட்கும் மேலானவர் ; என்றும் உள்ளவர்.

பசு: இது, இங்கு ஒரு விலங்கு அன்று; உயிர்களுக்குப் பொதுப் பெயர். ஆணவ கன்ம மாயைகளாகிய பாசத் தொடர்புடையது எதுவோ அதுவே பசு—ஆன்மா—உயிர். உயிர்கள் தொன்மையே உள்ளவை. இறைவனால் படைக்கப்பட்டவை அல்ல. இறைவனால் படைக்கப்பட்டவையாயின், உயிர்கள் யாவும் ஒரே தன்மையுடையனவாய் ஏற்றத்தாழ்வு சிறிதும் இன்றிப் படைக்கப்பட்டிருத்தல் வேண்டும். இறைவனால் படைக்கப்பட்டது உயிர்களுக்குரிய உடம்பும், அதற்கு அங்கமான கண் காது முதலிய புறக்கருவிகளும், மனம் புத்தி முதலிய அகக்கருவிகளும், உடலெடுத்த உயிர்கள் வாழ்வதற்கு உலகமும், அவ்வுலகத்திலுள்ள துய்த்தல் பொருள்களுமே. உயிர்கள் எண்ணற்றவை; எத்தனையோ வகையான பிறப்புடையவை ; அவை செய்யும் வினைக்கேற்ப மாறி மாறிப் பிறந்து இறந்து உழல்பவை ; என்றும் அழிவு இல்லாதவை. எந்தப் பொருளைச் சார்கின்

றனவோ அதன் வண்ணமாக நிற்பவை. அழிவது உயிர் எடுத்த உடம்பே அன்றி, உயிர் அன்று.

உயிர் என்றால் யாது? நான் என்னும் சொல்லால் குறிக்கப்படுவதே உயிர்; எனது உடல் என்பதனால் உடலினின்று வேறானது உயிர். ஓசை, ஒளி, மணம், சுவை, ஊறு ஆகிய ஐம்புலன்களையும் மனம் புத்தி இவற்றின் உதவியால் அறிகின்றது எதுவோ அதுவே உயிர். ஆழ்ந்த தூக்கத்தில் மூச்சுக் காற்றாகிய பிராணவாயு இயங்கினும் உடலுக்கு உணர்ச்சி இல்லையாதலால் பிராணவாயுவின் வேறானது உயிர். ஆனால் உயிர், பிராணவாயுவோடு நெருங்கிய தொடர்பு உடையது. ஆதலின் உடம்பிலுள்ள பிராணவாயுவின் நீக்கத்தால் உயிர் நீக்கம் அறியப்படுகின்றது. அதனால் உயிரும் பிராணவாயுவும் ஒன்று அல்ல. உயிர், மறந்து மறந்து நினைப்பதால் அது என்றும் முழு உணர்ச்சியோடு உள்ள இறைவனினின்று வேறாகும்; இறைவனினின்று தோன்றியது அன்று. உயிர்கள் என்றும் உள்ளவை.

தொன்மையே தம்மைப் பிணித்துள்ள பாச வேறுபாட்டால் உயிர்கள் மூவகைப்படுவார்கள். அவர்கள் விஞ்ஞான கலர், பிரளயாகலர், சகலர் ஆவர். இவர்களுள், விஞ்ஞான கலர் உயர்ந்த நிலையில் இருப்பவர்; ஆணவமலம் ஒன்றே உடையவர். பிரளயாகலர் இடைநிலையில் உள்ளவர்; ஆணவம் கன்மம் உடையவர். சகலர் கடைநிலையில் உள்ளவர்; ஆணவம், கன்மம், மாயை உடையவர். இவ்வுலகில் வாழ்கின்ற மனிதர் முதலியோர் சகலர். ஸ்ரீகண்டர் முதலியோர் பிரளயாகலர், அணுசதாசிவர் முதலியோர் விஞ்ஞான கலர்.

மும்மலம்: ஆணவம் கன்மம் மாயை ஆகிய மூன்றும் உயிர்களைக் கட்டுவதால் பாசம் என்று கூறப்படும். அவைகளினால் ஆன்மா தூய தன்மையின்றிப் பல தீவினைக் குற்றத்துக்கு ஆளாகின்றமையால் அவை மூன்றும் மும்மலம். ஆணவம், உயிர்களை அறியாமையில் அழுத்தி நிற்பது; மாயை தனுகரண புவன போகங்களாய் அமைவது; கன்மம்—உயிர்களின் நல்வினை தீவினை. இம்மும்மலங்களும் தொன்மையானவை; என்றும் உள்ளவை. ஆயினும், உயிரின் அறிவு

வளர்ச்சிக்கும், ஆண்டவன் செய்யும் அருளுக்கும் தக்கவாறு தம் வலிமை ஒடுங்கிச் செயலற்று, நிற்கும் தன்மையுடையன.

இம் மூன்றனோடு திரோத மலமும் மாயேய மலமும் கூட்டி மலங்கள் ஐந்து என்று கூறுதலும் உண்டு. திரோத மலம்—இறைவன் அருட்சத்தியே. உயிர்கள், ஆணவ வலிமை ஒடுங்கப்பெற்று வினைப்பயனை அனுபவித்து ஒழித்தற் பொருட்டு அருட்சத்தி உயிர்கள் உண்மையை அறிய ஒட்டாமல் சிறிதளவு மறைக்கிறது. (திரோதம்—மறைப்பு) அதனால் அச்சக்தி அந்நிலைமையில் திரோதமலம் எனப்படும். இது தீமை செய்வதுபோலத் தோன்றி நன்மை செய்வது. மாயேயம்—மாயாமலத்தின் காரியமாய உலகம் முதலியவையே. இதனால் உலகம் உள்பொருள் என்பது தெளிவாகும்; பிறர் கூறுவதுபோலத் தோற்ற மாத்திரமாக இருப்பது அன்று ; அதாவது உள்ளதுபோலத் தோன்றுவது அன்று ; என்றும் உள்ளதே.

எனவே, கடவுள் (பதி), உயிர் (பசு), தளை (பாசம்) இம் முப்பொருளும் என்றும் உள்ள பொருள்கள்; ஒருகாலத்தில் தோன்றி மற்றொரு காலத்தில் அழிபவை அல்ல.

சிவம்—சத்தி : சிவம் ஒருவரே. அவரே பதி. அவர் ஆண் அல்லர் ; பெண் அல்லர் ; அலி அல்லர். உலகத்திலும் எல்லா உயிர்களிலும் கலந்து நிற்பவர் ; பேராற்றலும் பேரருளும் உடையவர். அவர் இன்றி ஓர் அணுவும் அசையாது. உலகிலுள்ள ஒவ்வொரு பொருளுக்கும், பிரிக்க முடியாத சக்தியுண்டு. சிவத்துக்கு அளவற்ற சக்தியுண்டு. அது தீயிலிருந்து பிரிக்கமுடியாத வெப்பம் போன்றது. ஆயினும் மக்கள் எளிதில் சிவத்தையும் அவர் ஆற்றலையும் அறியும்பொருட்டு சிவத்தை ஆணாகவும், அவர் சக்தியைப் பெண்ணாகவும் முன்னோர் உருவகித்தனர். இவ்வகையாக அறிந்துகொள்ளுதல் இன்றிச் சிவசத்தியை நம்மைப்போல் ஆண்பெண் பாகுபாடாகக் கொள்ளுதல் கூடாது.

சைவர் ; உலகத்து உயிர்கள் பலவகைப்படும் : மரம் செடி கொடிகள் தொட்டால் அறிதலாகிய பரிச உணர்ச்சியுடைய ஓரறிவுயிர் ; சங்கு கிளிஞ்சல் முதலியவை பரிசித்தல்,

சுவைத்தல் என்னும் இரண்டு அறிவினையுடைய ஈரறிவுயிர் ; சிதல், எறும்பு முதலியவை பரிசித்தல், சுவைத்தல், மோத்தல் என்னும் மூன்று அறிவினையுடைய மூவறிவுயிர் ; நண்டு தும்பி முதலியன பரிசித்தல், சுவைத்தல், மோத்தல், பார்த்தல் என்னும் நான்கு அறிவினையுடைய நாலறிவுயிர் ; விலங்கு, பறவை முதலியன பரிசித்தல், சுவைத்தல், மோத்தல், பார்த்தல், கேட்டல் என்னும் ஐந்து அறிவினையுடைய ஐயறிவுயிர். இங்குக் கூறிய ஐந்து அறிவும் ஐம்புலன்கள். இவற்றிற்குக் கருவி மெய் (தோல்), வாய் (நாக்கு), மூக்கு, கண், செவி என்பனவை. இவை ஐம்பொறிகள். மனிதன் இந்த ஐந்தறிவோடு 'இது நல்லது இது தீயது' எனப் பகுத்தறியும் மனவுணர்வாகிய ஆறுவது அறிவை உடையவன். ஆதலின் மனிதப் பிறப்பே எல்லாப் பிறப்புக்களிலும் மேலானது. உயிர்களுக்கு மனிதப் பிறப்பு, மிக நீண்ட காலம் எத்தனையோ வகையான எண்ணற்ற கீழ் நிலையிலுள்ள பிறப்புக்களை எடுத்த பின்னர் சித்திக்கும். இப்பிறப்பு அருமையுடையது. இப்பிறவி நீங்கினால் மீண்டும் இப்பிறவியே வருமென்பது நிச்சயம் அன்று.

ஆதலின், இத்தகைய அருமையான பிறப்புடைய மக்கள், தமது பகுத்தறிவால் உலகின் தன்மையையும், உயிரின் தன்மையையும், உலகம் எதன்பொருட்டு யாரால் படைக்கப்பட்டது என்பதையும் கேட்டு அறிந்து, பதி உளன் என நிச்சயித்து, அவன் பரங்கருணை இதுவெனக் கண்டு, பிறப்பு இறப்புக்களால் வரும் துன்பத்தை உணர்ந்து, உயிர்களின் நற்பயன் கருதி உடல் கருவி உலகம் இன்பப்பொருள்களை ஆக்கித் தந்த அம்முதல்வனிடத்து என்றும் மாறாத அன்பு கொள்ளக் கடமைப்பட்டவராவர்.

கடவுள் உண்டென்று அறிந்து அவர் செய்துள்ள பேர் அருளை எண்ணி எண்ணி அவர்மீது அன்புகொண்டு மனங் குழைந்து அவரை மனத்தால் தியானித்து, வாயால் புகழ்ந்து, கைகூப்பி, வணக்கம் செய்தலே கடவுள் வழிபாடு.

சிவனை வழிபடுவோர் சைவர் ஆவர். அவர் செயல் சைவம் ஆகும். சிவத் தொடர்புடையது சைவம். சிவத்

தொடர்பு உடையோர் சைவர். உடலைப் பற்றிக் கொள்ளப்படு கின்ற எந்த சாதியில் பிறந்தவரும் சிவனை வழிபடுவோர் சைவரே. சைவர், சைவம் என்ற சொற்கள் சாதி பற்றி வந்தது அன்று ; சிவனை வழிபடும் சமயக் கோள்கை பற்றியது. விஷ்ணுவை வழிபடுவோர் வைணவர் ; சிவனை வழிபடுவோர் சைவர். சைவர்கள் செய்யும் சிவ வழிபாட்டுக்கு சிவனிடத் துள்ள அன்பே முதற் காரணம். எனினும் அவ்வன்பிற்குத் துணைக் காரணமாக எல்லா உயிர்களிடத்தும் அன்புடைமை யும் பிற உயிர்களைக் கொல்லாமையும் கொலைக்குக் காரண மான ஊனைத் தின்னுமையும் முதலிய அறங்கள் வேண்டப் படும். எனவே சீவகாருண்ணியத்தைத் துணையாகக் கொண் டது சைவம். சைவர் என்போர் சீவகாருண்ணியத்தை மேற் கொண்டு ஒழுகக்கடவர்.

ஆண்டான் அடிமைத்திறம் : சிவனின் கருணையால் உடல், கருவி, உலகம், துய்த்தல்பொருள் உயிர்களுக்கு அளிக்கப்பட்டிருத்தலை உணர்ந்தோர், அவன் பேரருளை எண்ணி எண்ணி அவரது ஒப்புயர்வற்ற மேன்மையை பாராட்டுவர். அப்பாராட்டின் வழி அவர் எல்லாவற்றையும் இயக்குவோர், யாவர்க்கும் தலைவர் என்பது தோன்ற அவரே உலகத்தையும், உலகத்து உயிர்களையும் ஆள்பவர் என்னும் உண்மை விளங்கும். மும்மலங்களால் கட்டுண்டு தம் வச மின்றி பிறந்து இறந்து உழலும் உயிர், ஆண்டவனது பெருங்கருணை, பேரறிவு, பேராற்றல் ஆகிய இவற்றை உணருங்கால் தன்னை ஆண்டவனுக்கு அடங்கிக்கிடக்கும் ஒரு சிறு பொருளாகக்கொண்டு அப்பரம்பொருளைப் பாராட் டும் இயல்பே அடிமைத் திறம்.

உயிர்—மக்கட் பிறப்பை அடைந்து, சைவ சமயத்தை மேற்கொண்டு, சிவவழிபாடு செய்து, அவ்வழிபாடு மேம்பட உலகக் கட்டுப்பாடு நீங்கி, மிக உயர்ந்த நிலையை (முக்தி) அடையுங்காலத்தும் ' சிவனே ஆண்டான், உயிர் அவருக்கு அடிமை ' என்று கொள்ளுதலே ஆண்டான் அடிமைத்திறம். இது சிவனடியார் கொள்கை.

(தொடரும்)

## " நிறங்களோரைந்துடையான் "

" சித்தாந்தம் " மலர் 22 இதழ் 12ல் திருமந்திரமணி துடிசைகிழார்—அ. சிதம்பரனார் எழுதியுள்ள " திருமூலர் திருமந்திர ஆலய விளக்கம் " என்னும் கட்டுரையில் கண்ட குறிப்பு, " சதாசிவ நாயனாரின் ஐந்து முகங்களையும் அததற்குரிய நிறங்களுடன் அமைத்துக் காட்டுவதுதான் தூபியாகும்."

" சத்திதான் நிற்கின்ற ஐம்முகம் சாற்றிடில்
உத்தரம் வாமம், உரைத்திடும் சத்தி
பச்சிமம், பூர்வம் தற்புருடன், உரை
தெற்கில அகோரம், தென்கிழக்கு ஈசனே "

என்னும் திருமூலர் வாக்கின்படி தூபியின் தென்கிழக்கில் ஈசன் முகத்தையும், கிழக்கில் தற்புருட முகத்தையும், தெற்கில் அகோரமுகத்தையும், வடக்கில் வாமதேவமுகத்தையும், மேற்கில் சத்தியோசாத முகத்தையும் அமைக்க வேண்டும்.

" நடுவுகிழக்கு தெற்கு உத்தரம் மேற்கு
நடுவு படிகம் நற்குங்கும வன்னம்
அடைவுள அஞ்சனம் செல்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை ஐந்தே"

என்றபடி ஈசான முகத்திற்குப் படிகநிறமும், தற்புருட முகத்திற்கு மஞ்சள் நிறமும், அகோரமுகத்திற்குக் கருப்பு நிறமும், வாமதேவ முகத்திற்குச் சிவப்பு நிறமும், சத்தியோசாத முகத்திற்கு வெள்ளை நிறமும் கொடுக்கவேண்டும். இயற்கையாகவே இவ் வைம்முகங்களும் ஐந்து நிறங்கள் உடையனவாய் இருப்பதால் சதாசிவப்பெருமானுக்கு "ஐந்நிற வண்ணர்" (பஞ்சவர்ண ஈச்சுரர்) என்ற பெயருமுண்டு.

(இதை, சித்தாந்தம் மலர் 30, இதழ் 7ல் கண்டுள்ள ஐய வினாவிற்கு விளக்கமாகக் கொள்ளலாம்.)

---

# சைவ சித்தாந்த மகா சமாஜம்,

# பொன்விழா மலர்

மிக மிகக் கவர்ச்சியான வெளியீடு. இதில் ஐம்பத்தொரு கட்டுரைகள் உள்ளன. சமாஜத்தின் ஐம்பது ஆண்டுகளின் நிகழ்ச்சிகள் தெளிவாக எழுதப் பெற்றுள்ளன. ஐம்பதாண்டுகளில் நடந்த நிறைவு விழாக்களின் தலைவர்கள் ; நடைபெற்றஇடங்கள்; மங்கையர் மாநாடு, இளைஞர் மாநாட்டு விவரங்கள் ; சமாஜத் தொண்டர்கள் தொண்ணூற்றொருவர் பற்றிய குறிப்புக்கள்; உயர்திருவாளர்கள்: ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள்,ஜே.எம்.நல்லசாமிப்பிள்ளை,ஸர். பொன்னம்பலம் இராமநாதன்,பொன்விழாத்தலைவர்கனம்சு. நடேசப்பிள்ளை, திரு.வி.க. முதலிய முப்பதின்மர் உருவப்படங்கள் ; வேறு பற்பல சிறப்புக்கள் இதில் மிளிர்கின்றன. கட்டுரையாளர்களுள் டாக்டர் அ.சிதம்பரநாதன் செட்டியார், டாக்டர் வ. ஆ. தேவசேனாபதி, தணிகைமணி ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராயப் பிள்ளை, சிவக்கவிமணி சி. கே. சுப்பிரமணிய முதலியார், சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார், சித்தாந்த ரத்நாகரம் முத்து சு. மாணிக்கவாசக முதலியார், திரு. அ. மு. பரமசிவானந்தம் முதலியோர் உள்ளனர். இருநூற்று நாற்பது பக்கங் கொண்ட அழகிய பதிப்பு.

விலை ரூபா ஒன்று. ரிஜிஸ்தர் தபாற்கூலி அணா பன்னிரண்டு. உடனே முன்பணம் அனுப்பிப் பெற்றுக் கொள்க. வி. பி. மூலம் அனுப்பப்படமாட்டாது.

கிடைக்கும் இடம் :

பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை–1.

Printed at the Sadhu Press, 15, Ganapathi Mudali Street, Royapettah by D.Mangayarkarasi and V.K. Punithavathi. Edited by C. M. Ramachandran Chettiar, B.A., B.L., and Published by S.Satchidanandam Pillai, B.A., L.T., for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4